உ

முருகன் துணை.



# திருச்செந்தூர்த் தலமகிமை.

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்,
திருச்செந்தூர்.

---

தென்காசி

லோகாம்பிகை பிரஸில் அச்சிடப்பெற்றது.

1936

உ

முருகன் துணை

# திருச்செந்தூர்த் தலமகிமை.



“............யா அமிரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பா
லருளு மன்பு மறனு மூன்று
முருளிணர்க் கடம்பி னொலி தாராயே” எனப்

பெரியார் வேண்ட நின்ற பெருமான் எழுந்தருளியிருக்கும் திருச்செந்தூர், திருநெல்வேலி ஜில்லாவின் கீழ்பாகம் கடற்கரைக்கருகாய் அமைந்திருக்கிறது. இத்தலம் மிகப்புராதனமானது. தமிழ்நாட்டில் மிகப்புராதன தலங்களாக எண்ணப்பெறும் தலங்களுள் ஒன்றாக இது பாராட்டப்பெறுகிறது. சற்றேறக்குறைய இரண்டாயிர வருடங்களுக்கு முன்னமேயே இத்தலம் ஸ்ரீ முருகப்பெருமான் திருக்கோவிலுடன் சிறப்புற்றிருந்திருக்கவேண்டுமென்று நினைப்பதற்குச் சான்றுகள் பலவுள. தமிழாராய்ந்த மதுரைக் கடைச்சங்க நூல்களைச் சேர்ந்த எட்டுத்

தொகையிலொன்ருகிய பத்துப்பாட்டின் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையில் திருச்சீரலைவாய் என்று பேசப்பெறுவது இத்தலமே. குறித்த ஆற்றுப்படையில் ஸ்ரீமுருகப்பெருமானைத் தெரிசிக்கத்தக்க தலங்களில் திருப்பரங்குன்றத்திற்கு அடுத்து இத் திருச்சீரலைவாயாகிய திருச்செந்தூரைக் காண்பித்து இங்கே ஸ்ரீ முருகப்பெருமான் சிறந்த ஆறு திருமுகங்களுடனும் பன்னிருகைகளுடனும் பிணிமுகம் என்னும் யானை மீதேறி தேவதுந்துபி, முரசம், வெண்சங்கு முதலியவைகள் முழங்கவும் வென்றெடுத்த கொடி மீதேறி மயில் ஒலிக்கவும் ஆகாயமே வழியாக விரைந்த செலவை மேற்கொண்டு மேன்மக்கள் புகழ்ந்த உயர்வாகிய சிறப்புப்பொருந்திய கீர்த்தியையுடைய திருச்செந்தூருக்கு எழுந்தருளுதலை நிலைபெற்ற குணமாகக்கொண்டவர் என்று நக்கீரதேவராகிய தமிழ்ச்சங்கப் புலவர் தலைவர் பாராட்டியிருக்கிருர். இத்திருமுருகாற்றுப்படையின் அமைப்பு, முத்தி பெற்ருெருவன் பெறவிரும்புவானை யாதரித்து அவனுக்கு அது பெறும்வழி இதுவெனக் காண்

பிக்கு முறையிலமைந்திருப்பதால் இங்கே ஸ்ரீ முருகப் பெருமானைக்கண்டு முகனமர்ந்தேத்தி கைதொழுது பரவி காலுறவணங்கி "நின்னடியுள்ளி வந்தனன் நின்னொடு புரைகுனரில்லாப்புலமையோய்" என்று கூறுமளவையில் அம்முருகப்பெருமான் தெய்வத்தன்மையுடைய தன் இளைய வடிவத்துடன் தோன்றிப்பிறராலே பெறுதற்கரிய திருவருளைத் தந்தருளுவன் என்பது நற்கீரதேவர் அறுதியிட்டுக் கூறிய திருவாக்காகும். இத்தகைய ஆன்றோர்மொழி என்றும் பொய்க்காது என்பது திண்ணம். என்னே! இத்தலத்தின் சிறப்பு! மக்கள் வாழ்க்கையின் நோக்கத்தையும் பயனையும் ஈயவல்லதென்றோ இத்தலம்! இத்தலத்தைப் பற்றிய பெருமை அகநானூறு புறநானூறு முதலிய நூல்களிலும் காணப்படுகிறது. இத்தலத்தில் கோவில் கொண்டருளும் ஸ்ரீ முருகப் பெருமானை, திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரசும், "நம் செந்தில்மேய வள்ளி மணாளன்" என்றுபோற்றியிருப்பது கருதத்தக்கது.

ஸ்ரீ முருகப்பெருமான் அசுர அரசனுகிய சூர பன்மாவை அழித்தருளத் திருவுளங்கொண்டு வானோர் தானைத் தலைவனாய் எழுந்தருளி வீரபாகு மூர்த்தியைத் தூதனுப்பிப் பதிலெதிர்பார்த்திருந்த இடம் இதுவென்றே புராணம் கூறலால் இத்தலம் ஸ்ரீ முருகப்பெருமானுடைய ஆறுபடை வீடுகளில் ஒன்ருகக் கருதப்படுகிறது. சூரபன்மாவை வென்று தேவர்களை வாழ்வித்தவுடன் சிவபூஜை புரிந்த இடம் இத்தலமே. "அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர் மாமுதல் தடிந்த" இடமே முன்னர் மாப்பாடு என்று பெயர் வழங்கி வந்ததென்றும் அதுதான் இப்பொழுது இத்தலத்திற்குத் தெற்கே ஆறுமைல் தூரத்திலிருக்கும் மணப்பாடு என்றும் கர்ண பரம்பரையாய்க் கூறி வருகின்றனர். ஸ்ரீமுருகப்பெருமான் சூரசம்மாரத்தை முடித்தவுடன் சிவபூஜை புரிந்த இடம் இத்தலமென்பதற்கு ஆதாரங்கள் கிடைக்கின்றன. அவை, இ த் த ல த் தி ல் ஸ்ரீ முருகப்பெருமானின் தியான சொரூபமாகிய மூலஸ்தான உருவமும் அதற்கணித்தாய்ப் பின்புறமிருக்கும் சிவலிங்கங்களுமே.

அதாவது, பூஜிக்கும் சிவலிங்கங்களுடன் இடப்புற முள்ள ஒரு கையில் ருத்திராக்கமாலையும் வலப்புற முள்ள ஒரு கையில் அர்ச்சிப்பதற்காக எடுத்த புஷ்ப மும் கொண்டுள்ள திருவுருவத்துடன் ஸ்ரீ முருகப் பெருமான் பக்தகோடிகளுக்குக் காட்சி யளிப்பதே யாகும்.

ஸ்ரீ முருகப்பெருமான் இத்தலத்தில் கோவில் கொண்டருளியது கந்தமாதன பருவதத்தில் என்று சொல்லப்படுகிறது. திருக்கோவிலிருக்குமிடம் இன் றும் மணற்பாரைக்குன்ருகவே புலப்படுகிறது. இப் பொழுது காணப்பெறும் கல்திருப்பணிகள் நடப்ப தற்குமுன் அது நன்ருய்க் காணக்கிடந்ததென்றும் கோவிலின் உட்சுவர்களெல்லாம் மணற்கற்பாரையிற் குடைந்து செய்யப்பட்டவை போலத்தோன்றின என்றும் சொல்லப்படுகிறது. இன்றும் கோவில் வெளிப்பிரகாரத்திலுள்ள பெருமாள் சந்நிதிக்குப் பக்கம் அப்பாரையின் ஒரு சிறுபாகம் காணலாம். கோவிலுக்கு வடபுறமிருக்கும் வள்ளியம்மையார் குகையின் அமைப்பும் இதற்குச்சான்ருகும்.

இத்தலத்திற்குத் தமிழ் மொழியிலாக்கப்பெற்ற தலபுராணம் ஒன்றுண்டு. இதனையியற்றியவர் வென்றி மாலைக்கவிராயர் என்னும் ஒரு பிராமணர் என்பர். இவர் கல்வியறிவில்லாதிருந்தவரென்றும் கோவிலில் மடைத்தொழில் புரிந்திருந்தவரென்றும் குகப்பெருமான் அருளால் பாடும் வன்மைபெற்றுப் புராணம் பாடினரென்றும் சொல்லப்படுகிறது. இத்தமிழ்ப் புராணத்திற் கிணங்க வடமொழியிலும் ஒருபுராணம் இருக்கிறதாகத்தெரிகிறது. பிரதிகள் கிடைப்பதரிது.

இங்குள்ள ஸ்ரீ முருகப்பெருமான் மீது பலர் பல பிரபந்தங்கள் பாடியிருக்கிறார்கள். அவைகளில் சிறந்ததாகக் கருதப்படுவது பகழிக்கூத்தர் என்ற ஒரு வைணவக்கவி செய்திருக்கும் பிள்ளைத்தமிழ். இது சொல் நயமும் பொருள் நயமும் செறிந்து விளங்குகிறது. சந்தஞ் செறிந்து விளங்கும் அருணகிரியார் திருப்புகழ்ப்பாடல்களும் இத்தலத்திற்குண்டு.

இத்தலத்தில் ஸ்ரீ முருகப்பெருமான் சந்நிதியில் இருபத்திநாலு தீர்த்தக்கட்டங்கள் இருக்கின்றன. அவைகள் முறையே (1) முகாரம்ப தீர்த்தம் (2) தெய்வயானை தீர்த்தம் (3) லெக்ஷிமி தீர்த்தம் (4) சித்தர் தீர்த்தம் (5) அட்டதிக்குப்பாலகர் தீர்த்தம் (6) காயத்திரி தீர்த்தம் (7) சாவித்திரி தீர்த்தம் (8) சரஸ்வதி தீர்த்தம் (9) ஐராவத தீர்த்தம் (10) திரிசூலி தீர்த்தம் (11) வள்ளிநாயகி தீர்த்தம் (12) துர்க்காதேவி தீர்த்தம் (13) ஞானதீர்த்தம் (14) சத்திய தீர்த்தம் (15) தரும தீர்த்தம் (16) முனி தீர்த்தம் (17) தேவர் தீர்த்தம் (18) பாவநாசதீர்த்தம் (19)ஸ்கந்தபுட்கரணி தீர்த்தம் (20) சேது தீர்த்தம் (21) தசகங்கை தீர்த்தம்(22) கந்தமாதன தீர்த்தம் (23) மாதுரு தீர்த்தம் (24) தென்புலத்தார் தீர்த்தம், என்று அழைக்கப்படுகின்றன. இத்தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து ஸ்ரீ முருகப்பெருமானை ஐயம் திரிபறப் பக்தி விசுவாசத்துடன் வழிபட்டவர்கள் அளவிடற்கரிய பெரும் புண்ணியமும் முடிவில் முத்திப்பேறும் அடைவார்கள் என்று புராணம் கூறுகின்றது. பிராயச்சித்தம் செய்

கிறவர்கள் இத்தீர்த்தங்களில் பொருத்தமான தீர்த் தக்கரையில் பிராயச்சித்த கருமம் செய்து தீர்த்தத் தின் விதிப்படி முழுகி ஸ்ரீ முருகப்பெருமானை வழி பட்டு இன்றும் கருதிய பலன் பெறுகின்றார்கள்.

திருக்கோவிலும் கோபுரமும் கோவிலைச்சுற்றிய மணல்மேடும் இவைகளையடுத்து விரிந்து பரந்து ஒலிக்கும் கடலும் இயற்கை வனப்புமிகுந்து கண்ட வர் மனதைக் கவர்ந்து என்றும் இன்பம் பயப்பது வெளிப்படை. மணல் மேட்டுக்கு மேற்கே துண்டுகை விநாயகர் எழுந்தருளியிருக்கின்றார். இவர் பக்தர் களுக்குத் தன் தம்பியாரைத் தூண்டிக் காட்டிக் கொண்டே இருக்கின்றார். இவர் இருப்பிடம் முதல் மணல்மேடு பூராவும் மிகப்புனிதமான இடமாகக் கருதப்படுகிறது. இங்கே வசனமிருந்து தவம் செய்பவர்கள் தூண்டுகை விநாயகர் கோவிலுக்கு மேற்கே செல்வதில்லை. இப்பொழுது, கோவிலைச் சுற்றி மணல் மேடெங்கும் இரவெல்லாம் மின்சார விளக்குகள் பிரகாசித்துக்கொண்டிருப்பதால் இயற்கை

வனப்புடன் செயற்கை வனப்பும் சேர்ந்து என்றும் மறக்கவொண்ணுக் காட்சியளிக்கின்றது. அதிகாலையில் பசுங்கடல்மீதெழுந்து பிரகாசிக்கும் அருக்கன் என்றும் பச்சைமயில்மீதேறிப் பக்தர்களுக்குக் காட்சியளித்துப் பாசவிருளகற்றும் பச்சிளங் குமரனை நினைப்பூட்டுகின்றுன்.

மேற்குறித்த தீர்த்தங்களில் முகாரம்ப தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஸ்ரீ முருகப்பெருமானை வழிபட்ட விசேஷத்தால் ஒரு பாண்டிய அரசன் புதல்வி குதிரை முகம் நீங்கப்பெற்றுத் தன் சுயமான நன்முகம் வரப்பெற்றுளென்பதைக் கூறித் தீர்த்தத்தின் சிறப்பையும் இத்தலத்திலுள்ள ஸ்ரீ முருகப் பெருமான் வழிபாட்டின் பெரும்பயனையும் வற்புறுத்துகின்றது புராணம். கந்தர் கலிவெண்பா மீனுக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் பண்டாரமும் மணிக்கோவை முதலிய அரும் பெரும் பிரபந்தங்களியற்றிய குமரகுருபரப்பெருந்தகையார் ஐந்து வயது வரையும் ஊமையாயிருந்து இத்தலத்தில் வந்து தீர்த்தமாடி ஸ்ரீ முருகப்பெருமானை விடாது பற்றி

வழிபட்டு வசனமிருந்த புண்ணியத்தால் ஊமை நீங்கப்பெற்றதும் உடனே உணர்த்துவிப்பார் வேறொருவரின்றிச் சைவசித்தாந்தத்தின் சாரமெனக் கருதப்படும் கந்தர்கலிவெண்பாவைப் பாடிமுடிக்கும் புலமை பெற்றதும் தமிழ் நாடெங்கும் பிரசித்தமான தொன்றே. பெருமான் சர்வவியாபியாயிருந்தாலும், பசுவின் அவயவங்களில் மடுவிலிருந்து மட்டும் பால் கிடைப்பது போல் சகலருக்கு (சாதாரண மனிதருக்கு) இத்தகைய தலங்களிலேயே அவனருள் சுரக்கின்றது என்பது சாஸ்திரக்கொள்கை. இதனையறிந்து பலர் இன்றும் இத்தலத்தில்வந்து ஸ்ரீ முருகப்பெருமானை வழிபட்டு நினைத்ததை நினைத்தவண்ணமே பெற்றுத் திருப்தியடைகின்றனர்.

இத்தலத்திலுள்ள சண்முகப்பெருமான் திருவுரு அன்னியநாட்டுக் கடற்படை யொன்றால் ஒரு காலத்தில் தூக்கிச் செல்லப்பட்டதென்றும் அப்பொழுது பெருமான் திருவருளால் கப்பலில் தூக்

சகுனம் ஏற்படக் கப்பல்காரர்களால் அவ்வுரு கடலில் தாழ்த்திவிடப் பட்டதென்றும், பின்னுல் பெருமான் ஆணையைத் தலைமேற்கொண்ட கோவிற் பணியாளர்கள் அவன் திருவருள் வழி காட்டக்கண்டு கடலிலிருந்து எடுத்து திரும்பக் கொண்டுவந்து சேர்க்க மறுபடியும் பிரதிஷ்டை செய்யப்பட்டதென்றும் பெரியார் கூறுகின்றனர்.

இத்தலத்தில் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்திற்குப் பாத்தியப் பட்டதாய் ஆறு கிளைமடங்களிருக்கின்றன. இவைகளுக்கு ஏராளமான சொத்துண்டு. தருமபுர வாதீனத்திற்கும் இங்கே கிளைமடமும் சொத்தும் உண்டு. இவைகள் தவிர, இந்து சமுதாயத்தாரிற் பல வகுப்பினரும் தனித்தனியே தங்கள் தங்களுக்கென்று மண்டபங்கள் கட்டியிருக்கின்றனர். இம்மண்டபங்களிலிருந்து ஸ்ரீ முருகப்பெருமானுக்கு ஆராதனை வழிபாடுகள் நடக்கின்றன. இத்தலத்தில் ஸ்ரீ முருகப்பெருமானுக்கு ஒவ்வொரு ஆண்டிலும் மாசிமாதத்திலும் ஆவணி மாதத்திலும் மஹோத்ஸவம் சிறப்பாய் நடை

பெறும். இங்கே மிகச்சிறந்த உத்ஸவமாகக் கொண்டாடப்பெறுவது வைகாசிவிசாகத் திருவிழா. இவ்விழாவில் பக்தர்கள் பல்லாயிரக் கணக்காய்க்கூடி எம்பெருமானைப் பணிந்து வழிபாடு செய்வார்கள். ஐப்பசி மாதம் நடைபெறும் ஸ்கந்த சஸ்டித் திருவிழா, வைதிக அனுட்டானங்களுடன் சிறப்புற்று விளங்கும்.

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்து மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூந்நலமும் பெற்றுப் பிரகாசிப்பது இத்தலமாதலால் இங்கே நடைபெறும் பெருந்திருவிழாக்களின் சிறப்பைக் கண்ணாரக் கண்டும் ஸ்ரீ முருகப்பெருமானை மனமொழி மெய்களால் வணங்கிப் பிரார்த்தித்தும் பெறற்கரிய பெரும் பேறு பெற்று மனிதப்பிறவியின் பயனை யடைவோமாக.

A. முத்தையபிள்ளை, B.A., B.L., சூபரிண்டெண்ட்.

A. C. S. கந்தசாமி ரெட்டியார், தருமகர்த்தர்.

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம், திருச்செந்தூர்.



